அருகுவதுகொண்டுங் கலைவதேனன்னே
பெருகுவதுதானே வரும். ௮

பூவிலயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவியளந்தோனுந் தாமிருக்க-நாவில்
இழைக்கிறானை நடுமேழைபறிவேனோ
குழைக்கும்பிஞ்ஞகன்றன் கூத்து. ௯

ஐயமென்றுரைத்தீர்நாயேற் கடுக்குமோவருளிலேனைப்
பொய்யொடுகளவுமற்றுப் புலன்களையொடுக்கிக்கொண்டு
உய்யவேபுலன்களைந்து முபர்பரவெளியுள்ளாக்கி
வெய்யவன்மதியும்போல விரவுவனையராவர் ௰

ஞானவானென்றுசொன்னீர் நாதவிந்துங்கடந்து
கானலைவனையுஞ்சுட்டுக் கடுவெளிபரமானந்தந்
தானெனுமவையிரண்டுந் தவிர்ந்துதன்வசமுங்கெட்டு
மோனமுங்கடந்தேயப்பால் முடிந்தவர்ஞானியாவார். ௰௧

சாதியிலேதொண்ணூற்றொன்பானுஞ்சாதி
சமயத்திற்பதின்மூன்றுஞ்சமயமாகும்
நீதியிலேசிவனுடையநீதியாகும்
நிலைமையிலேவேதாந்தநிலைமையாகும்
ஆதியிலேயெங்களூர்கருவூராகும்
அங்கத்திற்போயடைவோம்பேரூர்தன்னிற்
சோதியிலேபரஞ்சோதிக்கூட்டமாகுஞ்
சொல்லுதற்குமெங்கள்குலஞ்சுக்கிலமதாமே. ௰௨

எந்தவூரென்றீரிருந்தவூர்நீர்கேளீர்
அந்தவூர்ச்செய்தி யறியீரோ-வந்தவூர்
முப்பாழும்பாழாய் முடிவிலொருசூனியமாய்
அப்பாலும்பாழென்றறி, ௰௩

இல்லுமில்லென்றுசொன்னீர் நேசபாசங்களைந்தும்
புல்லறிவோடுவாங்கப் புலைகொலைகளவுமற்றுச்
சொல்லுதற்கரியஞானச் சுழுமுனைமுடியின்மீதில்
எல்லையுங்கடந்தேயப்பா லேகமானவர்களிற்பார், ௰௪

இருமிருமென்றுசொன்னீ ரேற்குமோவேழையேற்குத்
தருபொருளுணர்ந்துசைவசமயமுமனைத்துநீங்கி

மருட்டுவினையுநீங்க மாசிலாவுண்மைஞானம்
பெருந்தினரிருப்பர்பின்பு பொருந்தவிறப்பார்தாமே. ௰௮

போமெனவுரைத்தீரென்னைப் பொறியொடுபுலன்களைத்தும்
ஆமெனும்விச்சையோடு மங்ஙனமழித்துக்கொண்டே
ஏமமுஞ்சாமமற்றே யிரவொடுபகலுமற்றுச்
சோமனூர்பதியைவிட்டுத் தூங்குவர்போவரன்றே. ௰௯

அடிசிற்கினியாளே யன்புடையாளே
படிசொற்றவறாதபாவாய்-அடிவருடிப்
பின்றூங்கிமுன்னெழுந்த பேதையேபோதியோ
என்றூங்குமென்கண் ணிரா. ௨௰

ஆகச்செய்யுள்-௨௬௪.

---

மகாகவியாகியகம்பர்

அவ்வவ்வமயங்களிற்கூறியதனிப்பாடற்றிரட்டு

---

கடல்கிழக்குத்தெற்குக் கரைபொருவெள்ளாறு
குடதிசையிற்கோட்டைக் கரையாம்-வடதிசையில்
ஏணாட்டுப்பண்ணை யிருபத்துநாற்காதஞ்
சோணாட்டுக்கெல்லையெனச்சொல். ௧

வெள்ளாறதுவடக்கா மேற்குப்பெருவழியாந்
தெள்ளார்புனற்கன்னி தெற்காகும்-உள்ளார
ஆண்டகடல்கிழக்கா மைம்பத்தறுகாதம்
பாண்டிநாட்டெல்லைப் பதி. ௨

வடக்குத்திசைபழனி வான்கீழ்தென்காசி
குடக்குத்திசைகோழிக் கோடாம்-கடற்கரையின்
ஓரமேதெற்காகுமுள்ளெண்பதின்காதம்
சேரநாட்டெல்லையெனச் செப்பு. ௩

மேற்குப்பவளமலை வேங்கடநேர்வடக்காம்
ஆர்க்குமுவரி யணிகிழக்கு-பார்க்குளுயர்
தெற்குப்பினாகி திகழிருபதின்காதம்
நற்றொண்டநாடெனவே நாட்டு. ௪

ஆழியரண்பள்ளியணையே யவன்கடைந்த
வாழிவளையின் மணித்தாம்பே-யூழியான்
பூணையுரமெரித்த பொற்சிலையிற்பூட்டுகின்ற
நாணையகல நட. ௫

மங்கையொருபங்கர் மணிமார்பிலாரமே
பொங்குகடல்கடைந்த பொற்கயிறே-திங்களையும்
சீறியதன்மேலூருந் தெய்வத்திருநாணே
ஏறியபண்பே யிறங்கு. ௬

பாரைச்சுமந்தபடவரவே பங்கயக்கண்ணன்
விரங்கிடந்துறங்கு மெல்லணையே-ஈரமதிச்
செஞ்சடையான்பூணுந் திருவாபரணமே
கஞ்சுடையாய்தூர நட, ௭

சிரம்பார்த்தானீசனயன் றேவிதனைப்பார்த்தான்
கரம்பார்த்தான்செங்கமலக் கண்ணன்-உரஞ்சேர்
மலையெடுத்ததிண்புயத்து வண்ணான்சீராமன்
கலையெடுத்தகோத்திதனைக் கண்டு, ௮

ஆரார்தலைவணங்கா ரார்தான்கைகொடார்
ஆரார்தான்சத்திரத்தி லாராதார்-சீராருந்
தென்புலியூர்மேவுஞ் சிவனருள்சேரம்பட்டத்
தம்புகானவாசலிலே தான். ௯

கொற்கையாண்மாறன் குலசேகரப்பெருமான்
பொற்கையானுனகதை போதாதோ-நற்கமல
மன்றலைவாரி மணிவாசலைப்பசைக்கத்
தென்றலேயேன்வந்தாய் செப்பு. ௰

போரசர்தேவிமார் பெற்றமதலையர்தம்
மார்பகலங்கண்டு மகிழ்வரோ-போர்புரிய
வல்லான்களங்கன் வாணன்றிருநாமம்
எல்லாமெழுதலா மென்று. ௰௧

உலைக்குரியபண்ட முலந்திரக்கச்சென்றால்
கொலைக்குரிய வேழங் கொடுத்தான்-றலைக்குரிய
வாணர்கோனுறை மகதேவனுக்கிந்தப்
பாணனேயென்ன பகை. ௰௨

வாணன்பெயரெழுதா மார்புண்டோமாதகர்கோன்
வாணன்புகழுரையாதாயுண்டோ-வாணன்
கொடிதாங்கில்லாத கொம்புண்டோவுண்டோ
அடிதாங்கில்லா வரசு. ௰௩

உமையவளுநீயு மொருங்கொப்பேயொப்பே
உமையவளுக்குண்டங் கோரூணம்-உமையவடன்
பாகந்தோய்ந்தாண்டான் பல்க்குழன்றன்பாண்டியனின்
ஆகந்தோய்ந்தாண்டா னரசு, ௰௪

மோட்டெருமைவாவிபுக மூட்டிவரால்கன்றென்று
வீட்டளவும்பால்சொரியும் வெண்ணெயே-நாட்டில்
அடையாநெடுங்கதவு மஞ்சலென்றசொல்லும்
உடையான்சடையப்பனூர். ௰௫

வெற்றிபுனைதாதகிக்கும் வேம்புக்கும்பெண்ணைக்கும்
சுற்றும்பெருநிழலாய்த் தோன்றுமே-கற்றோர்
திறந்தாங்குந்தாங்குஞ் செகமுழுதுந்தாங்கும்
அறந்தாங்குந்தொண்ட வரசு. ௰௬

கந்தமலர்ப்பிரமன் கன்னிமடவார்க்கெல்லாம்
அந்தவிளநீரைமுலையாக்கினான்-சுந்தரஞ்சேர்
தோற்றமிகுவல்லிக்குத் தோப்பைமுலையாக்கினான்
ஏற்றமிதில்யார்தா னியம்பு. ௰௭

இருந்தவளைப்போனவளை யென்னையவளை
பொருந்தவளைபறித்துப் போனான்-பெருந்தவளை
பூத்தத்தத்தேன்சொரியும் பொன்னிவளநன்னாட்டின்
மாத்தத்தன் வீதியினில் வந்து. ௰௮

ஆழியானாழி யயனெழுத்தாணியென்பார்
கோழியான்குன்றெறிய வேலென்பான் பூழியான்
அங்கைமெழுகென்பா னருள்பெரியமாவண்டூர்ச்
சிங்கனுலக்களத்திற் சென்று. ௰௯

குடகர்குணகட லென்பர்குடக்குக்
கிடகர்வடகடலென்பர்-வடகடலோர்
தென்கடலென்பர் திருந்துதாரச்சுதனின்
முன்கடைநின்றார்க்குமுரசு. ௨௰

தினைவிளைத்தார்முற்றந் தினையுணங்குஞ்செந்நெ
றனைவிளைத்தார்முற்றமது தானுங்-கனையு
முரசுணங்குச்சங்குணங்குமூரித்தேர்த்தானை
அரசுணங்குமச்சுதன் முற்றம், ௨௧

குறையுளாரெங்கிரார் கூர்வேலிராம
விறையாறுதிங்க ளிருந்தான்-முறைமையால்
ஆலிக்குந்தார்மார்பா வச்சுதாவுன்றனில்
வாலிக்கிளையான் கடை. ௨௨

அரசனகளங்க னச்சுதன்முற்றத்
தரசரவதரித்த வந்நாள்-முரசதிரக்
கொட்டிவிடுமோசையினுங் கோவிந்தர்காற்றளையை
வெட்டிவிடுமோசை மிகும். ௨௩

தலையவிழ்நாண்மாலைத் தாயரேயாவி
கலையினுமென்கண்டிரந்து காட்டேன்-வலைகொடுபோம்
வல்கண்ணன்மாவிசையன் மால்யானைதன்னொடும்வந்
தென்கண்புகுந்தா னினி. ௨௪

பாண்டியனைப்போர்மாற்றிப் பாணர்க்கரசளித்த
வாண்டகையென் னுள்ளே யறியேனே-மூண்டெழுந்த
கார்மாற்றுஞ்செங்கைக் கடகரிவாணவனது
பேர்மாற்றுவதோ பேசு. ௨௫

வாட்டானைத்தென்னவர்கோன் மாகதற்குத்தோற்றசெய்தி
கேட்டானைத்திங்குரலும் கேட்டதற்கு ஞட்டம்
பொருந்தாயிரவிழியான் பொன்முடியைச்சாய்த்தங்
கிருந்தானிங்கென்னாது மென்று. ௨௬

பாணன்மதுரைப் பதியாளவைத்தபிரான்
வாணாபுகழ்வரு மேகம்பர்-வாணன்
கரும்போதகமேறின் கால்பணிவேன் மீண்டு
வரும்போதகமே வரின். ௨௭

படுபருந்துஞ்சூர்ப்பேயும் பன்மிருகஞ்சென்றுய்
கொங்கழுகுமிகப்பேயுங் கூடிவடிவுடைய
கோமான்களப்பாளன் கொள்யானைபோமாறு
போமாறுபோமாறு போம், ௨௮

பாண்டியன்பாடியது.

போற்றினும்போற்றுவர் பொருள்கொடாவிடிற்
றூற்றினுந்தூற்றுவர் சொன்னசொற்களை
மாற்றினுமாற்றுவர் வன்கணாளர்கள்
கூற்றினும்பாவலர் கொடியராவரே. ௩௬

மன்னவனுநீயோ வளநாடுமுன்னதோ
உன்னையறிந்தோதமிழை யோதினேன் என்னை
விரைந்தேற்றுக்கொள்ளாத வேந்துண்டோவுண்டோ
குரங்கேற்றுக்கொள்ளாத கொம்பு. ௩௭

அன்றையிலும்வையமகன்றதோவல்லவென்று
குன்றெடுத்துநீதிருத்திக் கொண்டாயோ-என்றும்
அடைந்தாரைக்காக்கு மகளங்காதுங்கா
நடந்தாயோநாலா றடி. ௩௮

காதமிருபதுநான் கொழியக்காசினியை
ஓதக்கடல்கொண் டொளித்ததோ-மேதினியிற்
கொல்லிமலைத்தேன்சொரியுங் கொற்றவாநீமுனிந்தால்
இல்லையோவெங்கட் கிடம். ௩௯

நீரெல்லாஞ்சேற்றுநாற்ற நிலமெலாங்கல்லுமுள்ளும்
ஊரெலாமபட்டிதொட்டி யுண்பதோகம்பஞ்சோறு
பேரெலாம்பொம்மன்திம்மன் பெண்களோநாயும்பேயும்
காருலாங்கோங்குநாட்டைக் கனவிலும்நினைக்கொணாதே. ௪௰

குமிண்டியுமபண்ணையுங் கூடமுளைக்கின்றகொல்லைக்கப்பை
திமிண்டியுமூதியுந்தின்னவல்லோரிந்த நீணிலத்திற்
றுமிண்டியங்காயதன்னை மொட்டையம்பாலெய்யுஞ்சூரர்கண்டீர்
கமிண்டியிற்பள்ளிக ளத்தனைபேர்களுநல்லவரே. ௪௧

செட்டிமக்கள்வாசல்வழிச் செல்லோமேசெக்காரப்
பொட்டிமக்கள்வாசல்வழிப் போகோமே-முட்டிபுகும்
பார்ப்பாரகத்தையெட்டிப்பாரோமேயெந்நாளுங்
காப்பாரேவேளாளர் காண், ௪௨

மேழிபிடிக்குங்கை வேல்வேந்தர்நோக்குங்கை
ஆழிகரித்தே யருளுங்கை-சூழ்வினையை
நீக்குங்கையென்று நிலைக்குங்கைநேமி
காக்குங்கைகாராளர் கை. ௪௩

மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட்டிங்குவந்து
சொற்கொண்ட பாவின் சுவையறிவாரிங்கிலையே
விற்கொண்ட வாணுதலாள் வேம்பேதருங்கூலி
நெற்கொண்டு போமவுகில்லாய் நெடுஞ்சுவரே. ௪௪

விருத்தம்,

தேரையார்செவ்விளநீருண்ணுப்பழிசுமப்பார்
நாரியார்தாமறிவார் நாமவரைநத்தாமை
கோரைவாய்ப்பொன்சொரியுங் கொல்லிமலைநன்னாடா
ஊரைவாழ்மூ - வுலைமூடிதானிலையே. ௪௫

மட்டுப்படாக்கொங்கை மாதர்கலவிமயக்கத்திலே
கட்டுப்பட்டாயென்னகாதல்பெல்ருய் மதன்கையம்பினாற்
பட்டுப்பட்டாயினுந்தேருவையேயென்று பார்த்திருந்தேன்
வெட்டுப்பட்டாய்மகனே தலைநாளின்விதிப்படியே ௪௬

வில்லம்புசொல்லம்பு மேதினியிலிரண்டுண்டு
வில்லம்பிற்சொல்லம்பே மேலதிகம்-வில்லம்பு
பட்டதடாவென்மார்பிற் பாண்டியாவின்குலத்தைச்
சுட்டதடாவென்வாயிற் சொல். ௪௭

கரைக்குவடக்கிருக்குங் காளிகாளமமைக்
கரைத்துவழிசாதனைத் தொட்டப்போய்-உரைத்தும்
மறைக்வழிபறிபாத வன்மைபயின்கையைக்
குறைக்குமாங்கூன்கத்தி கொண்டு, ௪௮

காலப்புபணிகர்காராளர்தம்மைக் கடலுடுத்த
தாலக்குலமங்கைபெற்றதனாற் சதாகாலமுமால்
கோலமதிமுகத்தாலே முகந்தனன்கூடலிலே
சூலைக்கரப்பனையான் றலைமீதுசுமந்தனனே. ௪௯

கல்லன்காடுகனில்விளையாக் கடுகநிலத்திற்றன் பூளையா
அல்லனிருந்தகாங்கூந்த லணங்குக்கணங்குபோலாவாள்
செல்லன்றேவிமனைகட்டாறுங் கேடித்திரிந்துங்காணுக
நெல்லஞ்சோறேகம்பஞ் சொற்றினைசுமந்து திரிவாயே. ௫௰

கம்பர்சற்றுச்சொல்லி.

மாவுறங்கின்புள்ளுறங்கின வண்டுறங்கின தண்டலைக்
காவுறங்கின வென்னகண்மாளிற கண்ணுறங்கிலையோ கோ
கோவுறங்குகடைக்கலைக்கல தீபவெள்ளைகுகடிவாய்
ஆவுறங்குபசாரசஞ்சல மஞ்சலென்னலைடுக்குமே. ௫௧

## அம்பிகாபதியும் கம்பரும்பாடியது.

இட்டடிநோவ வெடுத்தடிகொப்பளிக்க
வட்டில்சுமந்து மருங்கசையக்-கொட்டிக்
கிழங்கோகிழங்கென்று கூறுவாணாவில்
வழங்கோசைவையமபெறும் ௫௨

## அம்பிகாபதி.

சற்றேபருத்ததனமே குலுங்கத்தரளவடந்
துற்றேபசையக்குழையூசலாடத் துவர்கொள்வெவ்வாய்
நற்றேனொழுகநடனசிங்கார நடையழகி
பொற்றேரிருக்கத் தலையலங்காரமபுறப்பட்டதே. ௫௩

வெங்கண்சிவந்து வெடிவான்முறுக்கிவெகுண்டெழுந்தென்
அங்கம்பிளக்கவருங் [illegible]யனையிரணியனைப்
பங்கம்படவரங்கீண்ட யுதிரம்பருகுநர
சிங்கமிருக்குதுகாண் கெடுவாயென் றன்சிந்தையிலே, ௫௪

வீரமுண்டோமதன்கையம்பினால்வெந்து வீழுகைக்கு
நேரமுண்டோவஞ்சிநேர்பட்ட காலையிலெஞ்சைவிடப்
பேரமுண்டோசொலவொண்ணாத காமப்பெருநெருப்புக்
கீரமுண்டோவையமேனை யென்னபாவமினிசசொல்வதே, ௫௫

உருகியுடல்கருகி யுள்ளீரல்பற்றி
எரிவதவியாதென் செய்வேன்-வரிபரவ
நஞ்சிலேதோய்ந்த களினவிழிப்பெண்பெருமாள்
நெஞ்சிலேயிட்ட நெருப்பு. ௫௬

வாணன்புகழ்க்கெல்லை வாழ்த்துவோர்நாவெல்லை
வாணன்புகழ்க்கெல்லை மண்ணெல்லை-வாணன்
படைக்கெல்லைதிக்கெல்லை பைந்தமிழ்தேர்வாணன்
கொடைக்கெல்லையேற்பவர்தங் கோள், ௫௭

நில்லாதபல்லும்பறிபட்டகூந்தலு நீண்டகரிப்
பொல்லாதவழுக்கும் புடைவையுமாய்வெகு பூச்சியம்போய்ச்
செல்லாப்பணத்துக்குத் தேட்பினுமற்றுத்தியங்கியொன்றும்
இல்லாதபாவிதனக்கார் துணைபொன் னிராட்டினமே. ௫௮

வாசமலர்மங்கை போல்வார்மருதவனத்
தீசனடியா ரெழுபதின்மர்-நேசத

இரவலர்மேனீட்டுவர்கை யீண்டுலகையாளும்
புரவலர்மேனீட்டுவர் பொற்றாள். ௫௯

இடைக்காட்டார்பாடியவூசிமுறி,

ஆற்றங்கரையினிலிருந்தமாமரத்திற்
காக்கையிருந்து கம்பந் தம்பென்னக்-காக்கைக்கே
எய்யக்கோலில்லாமல் இச்சிச்செனவெய்தான்
வையக்கோனாரின் மகன். ௬௰

ஏகம்பவாணன் மனைவி.

சேனைதழையாக்கிச் செங்குருதிநீர்தேக்கி
ஆனைமிதித்தவருந்சேற்றின்-மானபரன்
பாவேந்தர்வேந்தன் பறித்துநட்டானேகம்பன்
மூவேந்தர்தங்கண் முடி. ௬௧

கம்பர்வீட்டுவெள்ளாட்டி.

நெற்படிவிளைகழனிபுடைசூழ் நன்பலிவாழ்சச்சன்
கற்படிபனைத்தாளான் பெரியராங் கணகணகணவென்
விற்படிவாணுதலாள் பனைவிரின் மினிமினிமினிமினி
சொற்படிவேலைசெயும் வேளாதுங்குமிதுரிதுரிதி ௬௨

வட்டமதிபோலிருக்கும் வன்னிக்கொடிகாவுங்
கொட்டுவார்கையினின்றுகூத்தாடுர்-சுட்டால்
அரகராவென்னுமே யம்பலசோமாசி
ஒருநாள்விட்டேனீதுரை. ௬௩

தென்னவாமீனவ சீவிலிமாறாதுரை
மன்னவாபாண்டி வராமா-துன்னுஞ்
சுரும்புக்குத்தாரளித்த துய்யதமிழ்நாடா
கரும்புக்குவேம்பிலே கண். ௬௪

மார்ப்பைங்கார்க்கல்லமுத்து வண்ணத்தார்க்கல்லவென்றி
வேப்பந்தார்க்காசைகொண்டு விட்டாளே-பூப்பைந்தார்
சேர்ந்திருக்குங்கல்வேல்ச் சீவில்மாறு தமிழை
ஆய்ந்திருக்கும்வீர மாறு. ௬௫

தேம்பாகிலுமினிய சொல்லுக்குநீபுனைந்த
வேம்பாகிலுந்தா வேண்டாமோ-மின்பாயும்

வேலையிலேவேலைவைத்த மீனவாநின்புயத்து
மாலையிலேமாலைவைத்தாண் மான். ௯௬

இலந்துபுகழா னறையேகம்பவாணன்
அலசைவரும்வாரமென் றஞ்சி-உலகறிய
வானவர்கோன்சென்னிமிசை வண்சைவளையெறிந்த
மீனவர்கோன் கைவிடான்வேட்பு. ௯௭

பாண்டியன்மனைவி.

வேண்டியபோதின்பம் விரும்புமடந்தையரைத்
தீண்டியகையாலென்னைத் தீண்டாதே-பாண்டியா
முல்லைக்கதிரா முகம்பார்த்தகலநின்று
சொல்லக்கடவதெல்லாஞ் சொல். ௯௮

கலைபான்முலைமூடிக் கண்வலைக்குள்ளாக்கும்
விலைமாதர் காமவரவிட்டாரோ-விலைமாதர்
கொங்கையிலேதோய்ந்த குறைதீரத்துய்யசிவ
கங்கையிலேநீராடிவா. ௯௯

ஆக-செய்யுள் -௯௯.

—(+)—

இலக்கணக்கவிகளாகிய.

ஒட்டக்கூத்தரும்புகழேந்திப்புலவரும்

அவ்வவ்வமயங்களிற்கூறிய தனிப்பாடற்றிரட்டு.

———○———

கலைவாணிநீயுலகிலிருப்பதுவுங்கல்வியல்லோரைத்
தலைபாகக்காப்பதுவு மலர்நாவில்வாழ்வதுவுஞ் சத்தியமேயன்றோ
சிலைவாணனுவிருந் தாயிரம்புயக்கடுணிந்து முயர்சிவனுற்றான்
தலையாவிகொடுத்திடுஞ்செங்குந்த ருயிர்பெற்றிடநீ துயைசெய்வாயே ௧

நிலைதந்தாருலகினுக்குமியாவருக்குமானமதைநிலைக்கத்தந்தார்
கலைதந்தார்வணிகருக்குச்சீவனஞ்செய்தி டவென்றேறகையிற்றந்தார்
விலைதந்தார்தமிழினுக்குச்செங்குந்தரென்கவிக்கேகவிலையாகத்தான்
தலைதந்தாரெனக்குமொட்டக் கூத்தனெனப்பெயரினையுந்தான் தந்தாரே

பத்திக்கொண்டிருக்கும் பதரிப்போயலயப்
பைம்பொற்றூரசைசிந்தப் பகிரண்டத்திடைநீள்
மத்தக்கொண்டமதிக்குந் திரையாழிநெடுமால்
வடிவாகிப்புவிகைக்கொண் டருண்மாதுபரணை
முத்துப்பந்தரினிற்குங் குருளைக்குஞ்சினநேவள்
முருகற்கும்பொதியைக்கோ முனிவற்குஞ்சடிலக்

பாவைபடிக்கதுஞ்சோழன் பதக்கனிலோவம்மானை
பாண்டியனார்பராக்கிரமம் பக்சேளிலோவம்மானை ௯

ஒட்டக்கூத்தனுஞ்சோழராசனும்பாடியது,

ஆடுங்கடைமணிநாவசையாமலகிலமெங்கும்
நீடுங்குடையைத்தரித்த பிரானென்பர்நீணிலத்தில்
பாடும்புலவர்புகழொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துங்கசோழனென்றேயெனைச்சொல்லுவரே ௰

ஒட்டக்கூத்தன்,

இன்னங்கலிங்கத்திகல் வேந்தருண்டென்றோ
தென்னன்றமிழ்நாட்டைச் சீறியோ-சென்னி
அகளங்காவுன்றனயிராவதத்தின்
நிகளங்கால்விட்ட நினைவு. ௰௧

புகழேந்தி,

தென்னவன்றென்னர் பெருமான்றிறன்மதுரை
மன்னவன்கோக்களிற்றின் வல்லிக்கும்-பொன்னிநா
டாலிக்கும்வேந்தாமபயகுலன்மகளிர்
தாலிக்குமொன்றேதளை, ௰௨

புகழேந்தி,

சக்கம்பயிலும்புலவோர்கதலித்தண்டோட்டம்பகும்
பித்தனிவனென்பரென்னைக் கண்டார்பெருந்துய்யனைத்துத்
தத்தம்பிறகிடும்பார்வேந்தர் தங்கட்டபகுட
சத்தம்பசத்தகைகாண் கங்குல்யானைச்சயதுங்கனே ௰௩

ஒட்டக்கூத்தன்.

மாணிற்குமோவிந்தவாளறிவெங்கைமுன்வற்றிச்செத்த
காணிற்குமோவிவ்வெரியுந்தணன்முன்மனை கடலின்
மீனிற்குமோவிந்தவெங்கணன்சுறாமுணம்வீசுபனி
தானிற்குமோவிக்கதிரவன்றோற்றத்திற்றார்மன்னனே ௰௪

புகழேந்தி,

மானவனானந்தவாளரிவெங்கைமுன்வற்றிச்செத்த
கானவனனவ்வெரியுந்தணன்முன்கனைகடலின்
மீனவனானந்தவெங்கண்சுறாமுணம்வீசுபனி
தானவனானக்கதிரவனறோற்றநற்றார்மன்னனே ௰௫

ஒட்டக்கூத்தன்.

நானேயினியுன்னைவேண்டுவதில்லைநளினமலர்த்
தேனேகடாடந்திருந்திவாய்திறவாவிடிலோ
வானேறனையவிரவிகுலாதிபன்வாயில்வந்தாற்
றானேதிறக்கும்நின்கையிதழாகியதாமரையே ௰௬

புகழேந்தி,

இழையொன்றிரண்டுவகிர்செய்தநுண்ணிடையேந்துவள்ளக்
குழையொன்றிரண்டுவிழியணங்கேகொண்டகோபந்தணி
மழையொன்றிரண்டுகைமானாபரணனின்வாயில்வந்தாற்
பிழையொன்றிரண்டுபொறாரோகுடியிற்பிறந்தவரே ௰௭

ஒட்டக்கூத்தன்,

வெள்ளத்தடங்காச்சினவாளைவேலிக்கமுகின்மீதேறித்
துள்ளிமுகிலைக்கிழித்துமழைத்துளியோடிறங்குஞ்சோணாடர்
கள்ளக்குறும்பர்குலமறுத்தகண்டாவண்டர்கோபாலா
பிள்ளைமதிகண்டம்பேதைபெரியமதியுமிழந்தாளே. ௰௮

ஔவையார்.

ஒட்டாவொருமதிகெட்டாய்.

புகழேந்தி.

பங்கப்பழனத்துழுமுழவர்பலவின்கனியைப்பறித்ததென்று
சங்கிட்டெறியக்குரங்கிளநீர்தனைக்கொண்டெறியுந்தமிழ்நாடா
கொங்கைச்சமராபதியளித்தகோவேராசகுலதிலகா
வெங்கட்பிறைக்குங்கருப்பிறைக்கும்மெய்ந்தம்பிறைக்கும்விழிவேலே

ஒட்டக்கூத்தன்,

புள்ளிநக்குத்தார்மார்பன்பூம்புகார்வாழ்களியேம்
சுள்ளிநக்குங்களையுண்டுஞ்சோர்விலேம்-உள்ளபடி
சொல்லவாவாலிதுரோபதைகையைமுக்கரித்த
தல்லவாமகபாரதம் (வாலி-அரவக்கொடியையுடையதுரியோதனன்) ௨௰
என்றுபெறுவெண்யானீசன்றிருமுடிமேல்
சென்றுவிளையாடுகின்றதீபமே-என்றும்
செருப்படுக்கத்தோல்வாங்குஞ்சென்னியகளங்கன்
பொருப்புக்குத்தோலாப்புயம். தோல்-யானை ௨௧

வேளாளன்.

கோக்கண்டுமன்னர்குறைகடற்புக்கிலர்சோககப்
பூக்கண்டுகொட்டியும்பூவாதொழிந்திலபூமுழுதுங்

காக்கின்றமன்னகவிபொட் டக்கூத்தனின்கட்டுரையாம்
பாக்கொண்டொளிப்பர்கள்ளா தமிழ்பாடியபாவலரே. உ௨

கருமான்

செல்லன்புதல்வன் றிருவேங்கடவன்செகத்தருவாங்
கொல்லன்கவிதையைக்குறைசொல்லுவோ ரைக்குறடுகொண்டு
பல்லைப்பிடுங்கிப்பருங்காட்டமாட்டிப் பகைவர்முன்னே
அல்லும்பகலுமடிப்பேன் கவியிருப்பாணிகொண்டே. உ௩

அம்பட்டன்.

விண்பட்டபோக்கென வெல்லும்வல்லூரின் விலவிலத்து
புண்பட்டநெஞ்சொடு மிக்குதிக்குறும்பொட்டையாய்ப்புலாய்
கண்பொட்டையாயினும் மம்பட்டனென்கவிவாணர்முன்னே
பண்பட்டசெந்தமிழ்நீயுந் திடுக்கிடப்பாடுவனே,

குயவன்.

மோனைமுத்தமிழ் மும்மதமும்பொழி
யானைமுன்வந் தெதிர்த்தவனாரடா
கூனையுங்குடமுங் குண்டுசட்டியும்
பானையும்வனையுங்குசப் பையல்யான். உ௫

தச்சன்.

சொன்னசந்தக்கவியாவருஞ் சொல்லுவர்சொற்சுவைசேர்
இன்னசந்தக்கவியே தென்றபோதிலெதிர்த்தவரை
வன்னசந்தம்பெட்டவாயைக்கிழித்திந்த வாச்சியினாற்
கன்னசந்தங்களினிக்கவியாய்ப் பைக்கடாவுலனே. உ௬

தட்டான்.

திகிரிவட்டக்குடைச்செங் கோலபயன்செழுஞ்சிலம்பிற்
பகுதியொட்டக்கூத்தபட்டனோநா ணப்பணைக்கவியின்
மிகுதவொட்டத்தட்டிவிட்டகை யோட்டிலுருக்கிச்சுத்திப்
புகுதவொட்டித்தட்டிமேலணுகாவண்ணம்போர்செய்வனே உ௭

ஒட்டக்கூத்தனும்புகழேந்தியும்.

வென்றிவளவன் விறல்வேந்தர்தம்பிரான்
என்றுமுதுகுக்கிடான் கவசம்-துன்றும்
வெறியார்தொடைகமழு மீனவர்கோன்கைவேல்
எறியான்புறங்கொடுக்கினென்று. உ௮

பரிபும்புகழுமெவர்க்குமுண்டா மிந்தப்பாரிலுனக்
கழியுஞ்சிலையுங்கயலுமென்றுல களங்கதுங்கா

பொழியும்பொழுதெங்கள் பெம் சக்ரவர்த்திமுகத்திரண்டு
விழியும்புருவமுமாகிய தோ வுனை வெல்கின்றதே. உ௯

இக்குகளெட்டுகையந்துக்க முற்றுத்திக்கிட்டலா
தைக்கடற்சட்சாங்கை தக்கவிட்டுபோர்க்கிடமாமதா
இக்குமுற்றிக்கணுச்சற்றவிட்டுத் தெறித்திட்ட முத்தைக்
கொக்குமொக்கிவிக்கிக் கக்குமச்சோலைக்குறுங்குடியே. ௩௰

ஆகச்செய்யுள்-௩௪௫.

—*—

கவிவீரராகவமுதலியார்

தென்பொழிந்தவாயான் திருவேங்கடத்துடனே
ஏன்பிறந்தான்கண்ணுக் கினியானே-வான்சிறந்த
சீதேவியாருடனே செய்யதிருப்பாற்கடலில்
மூதேவியேன்பிறந்தாள் முன். ௧

இம்பர்வானெல்லை யிராமனையேபாடி
யேல்கொணர்ந்தாய்பாணநீ யென்றாள்பாணி
வம்பதாங்களபமென்றேன் பூசுமென்றாள்
மாதங்கமென்றேயாம் வாழ்ந்தேமென்றாள்
பம்புசீர்வேழமென்றேன் றின்னுமென்றாள்
பகடென்றேனுழுமென்றாள் பழனந்தன்னைக்
கம்பமாவென்றேனற் களியாமென்றாள்
கைம்மாவென்றேன்சும்மா கலங்கினாளே. ௨

இல்லெனுஞ்சொல்லறியா சிசைதையில்வாழ் தானனைப்போல் யாழ்ப்பாணன்யான்பல்லைவிரித்திருந்தக்கால்வெண்சோறும்பழந்தூசும்பலியாமற், கொல்லவினைத்தேதனது நால்வாயைப்பரிசென்று கொடுத்தான்பார்க்குள், தொல்லையெனதொருவாய்க்கும்நால்வாய்க்குமிரையெங்கே தூரப்புவேனே. ௩

மூன்னாளிருவர்க்கும் யாக்கையொன்றாகமுயங்கினமால்
பின்னாட்பிரியன்விரியையென்றாயினம் பேசனுறும்
இந்நாட்கொழுநன்மனை யென்றாயினமின்னமுமோர்
சின்னாளிலெமபடியோ வையகீயின்றசெப்புகவே. ௪

வாழுமிலங்கைக்கோ மானில்லைமானில்லை
ஏழுமராமரமோ வீங்கில்லை-ஆழி

அலைபடைத்தசெங்கை யபிராமாவின்று
சிலையெடுத்தவாறெமக்குச்செப்பு ௫

செஞ்சுடரின்மைந்தனையுந் தென்னிலங்கைவேந்தனையும்
பஞ்சவரிற்பார்த்தனையும் பாராதே-விஞ்சு
விரதமேபூண்டிந்த மேதினியையாண்ட
பரதனையும்ராமனையும் பார். ௬

வடவைக்கனலைப்பிழிந்துகொண்டு மற்றுமொருகால்வடித்தெடுத்து
வாடைத்துருத்திவைத்தூதி மறுகக்காய்ச்சிக்குழம்புசெய்து
புடவிக்கயவர்தமைப்பாடிப் பரிசுபெறுமற்றிரும்பிவரும்
புலவர்மனம்போனெருப்பைப் புழுவென்றிறைத்தாற்பொறுப்பாளோ
அடவிக்கதலிப்பசுங்குருத்தை நச்சுக்குழலென்றஞ்சியஞ்சி
அஞ்சொற்கிளிகள்பஞ்சரம்விட்ட கலாநிற்குமகளங்கா
திடமுக்கடவாரணமுகைத்த தேவேதேவசிங்கமே
திக்குவிசயஞ்செலுத்திவருசெங்கோனடாத்துமெங்கோனே. ௭

மாதரணிமென்முலைதோய் மாராசிதம்பரபூ
மாதரணிராசர்மகிழ் மாவசன-மாதர்
மறுகிடத்தேயம்பொன் மடவார்பழிக்கநெஞ்ச
மறுகிடத்தேங்குந் துரைப்பெண்வா. ௮

சொல்லுமல்லும்பகலுஞ் சோறுகிடைகிடக்கும்
கல்லுமுருகக் கனிந்தாற்றும்-புல்லிணைய
விண்கலக்குங்கீர்த்தி வேள்சிதம்பரக்குமுன்
பெண்கலக்கங்கொண்டுநின்றன் பேர். ௯

வந்தனந்தமென்னூ மணந்தோய்ந்துபாயப்பா
வந்தனம்விம்மிச்சோர்ந்தாள் வாகோடி-வந்தனங்கள்
அன்னமனங்கொள்ளாம லாள்சிதம்பரக்குமுன்
அன்னமனங்கொண்டியவே யாங்கு. ௰

மாவாரிமுத்தவெண்பன் மாதுமயலைத்தணிசேர்
மாவாரிமுத்தளித்த வைபோகா-மாவுச்
சிதம்பரவையாநீ திக்குளுயர்பூமா
சிதம்பரவையாநீ திக்கு, ௧௧

பங்கஜன்மேன்மேவியசௌ பாக்கியசுபமானளித்த
அங்கஜவேள்வெங்கணையா லாவிநொந்தளங்களிட
மாமரஞ்சிதம்பரவு மாதினையாள்கோடிகமஸ்
காரஞ்சிதம்பரயோ கா. ௧௨

இன்னங்கலைமகள் கைமீதிற் புத்தகமேந்தியந்தப்
பொன்னம்பலத்தனிற் புக்கிருந்தாளென்னபுண்ணியமோ
கன்னன்களந்தைக் கவிவீரராகவன் கச்சியிலே
தன்னெஞ்சமேடெனக் கற்றுணர்மருந்தமிழ்மறையுமோ. ௧௩

முன்னாட்டுத்தவராசனியுஞ்சேடனும்வான் மீகனுமுன்னில்லாமற்
தென்னாட்டுமலைபிடித்துப் பாரித்தும்புற்றிடத்துஞ் சென்றுசேர்ந்தார்
இந்நாட்டுப் புலவருனக்கெதிரிலையே கவிவீரராகவாநீ
பொன்னாட்டுப்புலவருடன்வாதுசெய்யப்போயினையே புகலுவாயே, ௧௪

கோளரவேந்துலகிலித்தப் புதுமையுண்டோவெனமொழிந்தகுமுறுகேள்
யாளவைவந்தனைத்தோய்ந்த கற்புடையபாஞ்சாலியணைந்தவீடன்
வாளரிபோலருகிருந்தமலயவெற்பிலிருந்து வந்துமாமுனைச்
சாளவாசலைத்திறந்துவரவழைத்து முலையாரத்தழுவினாளே. ௧௫

பணிபாரத்தோசையிலக்கொங்கை தோய்ந்திடப்பார்ப் [illegible]பல்லவி
பணிபாரத்தோசையிலாச்செத்தவர்வாய்ப் பிறப்பார்களென்றோ
பணிபாரத்தோசைமுன்னோனுக்கிட்டேத்திப் பழிசெய்தவன்
பணிபாரத்தோசைவராகாரன்றேர்க் கென்னயாவயிதே. ௧௬

வீரஞ்சொரிகின்றவெள்ளாயுனக்குப் பெண்வேண்டுமென்றால்
ஆருங்கொடாருங்க ளப்பன்கபாலம்மான்றிறடன
ஊருஞ்செங்காடுநின்றன் முகடியானையுங்கிளையோன்
பெருங்கடம்பனுமன்றாய் நீநிற்கும்பெருவயிறே ௧௭

கட்டுச்சோற்றைப்பறிகொடுத்தபோது பாடியது.

சீராடையற்றவைரவன் வாகனஞ்சேரவந்து
பாராருநான்முகன்வாகனந்தன்னைமுன்பற்றிக்கௌவி
நாராயணனுயர்வாகனமாயிற்று நன்மைமுகம்
பாரானைமவாகனன் வெந்தவயிற்றினிற்பற்றினனே. ௧௮

ஐமவாகனன் - அக்கினிதேவன்

பாண்டியன்மாலைகண்டாய் மகளேகிளைப்பார்த்தவர்க்கு
வேண்டியபவின்பமிகவருமோ வெண்ணெயேதிருடித்
தாண்டிக்குதித்தவற்கோ தண்டராமன்றடவரைமேல்
ஆண்டியிருப்பிடந் தாதனிருப்பிடமாம்பின்னே. ௧௯

சோனையுங்காத்துநல்லானையுங் காத்துத்துரோபதைதன்
தானையுங்காத்தடைந்தானையுங் காத்துத்தடக்கசலி
மானையுங்காத்தனுமானையுங் காத்தும்பவில்விழும்
ஆனையுங்காத்தவனே யெனைக்காப்பதரிதல்லவே, ௨௰

பொய்யருக்குப்பொய்யுரைத்தால் வெற்றியாமவருக்குப்பொய்யாச
த,மெய்யருக்குப்பொய்யுரைததற் றோப்பிறைபோற்றவந்துறையு மிடியு
ண்டாகும்,துய்யதாய்தந்தையர்க்குப்பொய்யுரைத்தால்வருணமயிணிதொ
லையாவென்றும்'உய்யவருடேசிகர்க்குப் பொய்யுரைத்தானரகமது வுண்
மைதானே, ௨௧

ஆகச்செய்யுள் ௩௯௫,

---

படிக்காசுத்தம்பிரான்

அடகெடுவாய்பலதொழிலு மிருக்கக்கல்வி
யதிகமென்றேகற்றுவிட்டோமறிவில்லாமல்
திட்டுளமோகனமாடக்கழைக்கூத்தாடச்
செப்பிடுவித்தைகளாடத்தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசையராகப்பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத்தையலார்தம்
இடமிருந்துகுற்றேவல்செய்தோமில்லை
என்னசென்மமெடுத்துலகிலிரக்கின்றோமே ௧

பெற்றுளொருபிள்ளை யென்மனையாட்டியப்பிள்ளைக்குப்பால்
பற்றுதுஞ்சிகுடிக்கத்தரமல்லபாலிரக்கச்
சிற்றூருமில்லையிவ் வெல்லாவருத்தமுந்தீரவொரு
கற்றாதரவல்லையாவல்லை மாணகர்காளத்தியே ௨

வழிமேல்விழிவைத்துவாடாமலென்மனையாளுமற்றோர்
பழியாமற்புள்ளையும்பாலென்றழாமற்பசியெனுஞ்சொல்
மொழியாமலென்னைவரவிட்டபாவிமுசித்துச்சதை
கழியாமலாவளித்தாய்வல்லமாநகர்காளத்தியே. ௩

சீதக்காதிபேரில்,

ஓர்தட்டிலேபொன்னு மோர்தட்டிலேநெல்லுமொக்கவிற்குங்
கார்தட்டியபஞ்சகாலத்திலே தங்கள்காரியப்பேர்
ஆர்தட்டினுந்தட்டுவாராமலே யன்னதானத்துக்கு
மார்தட்டியதுரைமால் சீதக்காதிவரோதயனே ௪

தேசித்துவந்தகவிராசர்தங்கட்குதித்தளித்தம்
பூசிக்குமின்னைப்பொருளொன்றுமேமற்றப்புல்லர்பொருள்
வேசிக்குஞ்சூதாடப்பார்க்கும்வேசிக்குமவேலைசெய்யுந்
தாசிக்குமாகுங்கண்டாய்சீதக்காதிதயாநிதியே, ௫

ஈயாதபுல்லரிருந்தென்ன போயென்னவெட்டிமரம்
காயாதிருந்தென்ன காய்த்துப்பலனென்ன கைபரப்பிப்
போயாசகமென்றுரைப்போர்க்குச் செம்பொன்பிடிபிடியா
ஓயாமலீபவன்வேள் சீதக்காதியொருவனுமே. ௬

காய்ந்துசிவந்தது சூரியகாந்தி கலவியிலே
தோய்ந்துசிவந்தது மின்னார்நெடுங்கண்கடொல்பலநூல்
ஆய்ந்துசிவந்ததுபாவாணர் நெஞ்சமனுதினமும்
ஈந்துசிவந்தது மால்சீதக்காதிதிருக்கரமே. ௭

தோட்டாளன்காயற்றுறை சீதக்காதிசிரந்தவச்ர
நாட்டான்புகழ்க்கம்பம் நாட்டிவைத்தான்றமிழ்நாவலரை
ஓட்டாண்டியாக்கியவர்கடம்வாயிலொருபிடிமண்
போட்டானவனுமொளித்தான் சமாதிக்குழிபுகுந்தே. ௮

தேல்கொடுத்தாய்திருச் செந்தூரர்க்கம்மியின்மீதுவைக்கக்
கால்கொடுத்தாய்நின்மணவாளனுக்குக் கவுணியர்க்குப்
பால்கொடுத்தாய்மதவேளுக்கு மூவர்பயப்படச்செங்
கோல்கொடுத்தாயன்னையே யெனக்கேதுங்கொடுத்திலையே. ௯

பொல்லாதமூர்க்கருக்கெத்தனைதான் புத்திபோதிக்கினும்
நல்லார்க்குண்டானகுணம் வருமோநடுராத்திரியிற்
சல்லாப்புடைவைகுளிர்தாங்குமோநடுச் சந்தையினிற்
செல்லாப்பணஞ்செல்லுமோ தில்லைவாழுஞ்சிதம்பரனே. ௰

மூவேந்தருமற்றுச் சங்கமும்போய்ப்பதின்மூன்றொடிரு
கோவேந்தருமற்றுமற்றொருவேந்தன் குடையுமற்றுப்
பாவேந்தர்காற்றிலிலவம் பஞ்சாகப்பறக்கையிலே
தேவேந்திரதருவொத்தாய்ரகுநாதசெய்துங்கனே. ௧௧

முன்னநின்னன்னை முலையூட்டி மையிட்டுமூக்குச்சிந்திக்
கன்னமுங்கிள்ளியுநாளல்லவே யென்னைக்காயபதற்கே
அன்னமுமஞ்ஞையும் போலொருபெண்கொண்டவாண்பிள்ளைநீ
இன்னமுஞ்சின்னவன்றானோ செந்தூரிலிருப்பவனே. ௧௨

முற்கரையப்பறையேற விட்டாட்கொண்முதல்வருள்ளக்
கற்கரைக்கும்படிபோதித் திருங்கருணைக்கடலைச்
சிற்பரைக்குட்டியை வெங்கெங்குதிக்குஞ்செங்கரும்பின்
சர்க்கரைக்கட்டியைக்கண்டேன் செந்தூரனுக்காரத்திலே. ௧௩

இன்னஞ்சிறுபிள்ளை செங்கோட்டுப்பிள்ளை சிவங்குபிள்ளை
பொன்னன்மணிப்பிள்ளை பூலோகமெங்கும்புகழும்பிள்ளை
சொன்னெஞ்சுழல்கின்ற சூரனை வென்றசொககேசர்பிள்ளை
வன்னக்கிளிப்பிள்ளை செந்திற்குறத்திக்குமாப்பிள்ளையே. ௧௪

காட்டிற்சிறந்ததிருமலை யாதுங்கநாகரிகா
காட்டில்வனத்திற்றிரிந்துழலாமற்கலைத்தமிழ்தேர்
பாட்டிற்சிறந்தபடிக்காசனென்றொரு பைங்கிளியைக்
கூட்டிலடைத்துவைத்தா யிசைதாவென்றுகூப்பிடுதே. ௧௫

விண்ணுக்குமண்ணுக்கும் போராய்விளங்குதேவேந்திரனென்னு
கண்ணுக்கினிய துரை சீதக்காதிகமலநிகர்
தண்ணுக்கிசைந்தவதனசந்ரோதய சாமியிந்த
மண்ணுக்குள்ளேயொளித்தான் புலவோர்முகம்வாடியதே. ௧௬

மறந்தாகிலுமறைக்காசுங் கொடாமடமாந்தர்மண்மேல்
இறந்தாவதென்னவிருந்தாவதென்ன விறந்துவிண்போய்ச்
சிறந்தாருங்காயற்றுரை சீதக்காதிதிரும்பிவந்து
பிறந்தாலொழியப்புலவோர் தமக்குமபிழைப்பில்லையே. ௧௭

என்னைக்கன்றுமுத்தனைக்குளிக்கு மிறைவனையனைக்குமேயன்று
மன்னனைக்கன்றிப்பின்னனைக்குதவா வணபுளாய்வருந்திவாடுவனோ
முன்னனைக்கொன்றுபின்னனைப்புரந்த முதுபகையவன்பிதாவுருமற்
றன்னனைக்கொன்றுவிசயனைப்புரந்த கவுத்துவாகாயலாதிபனே ௧௮

கல்லடிக்குமுளியிரண்டு காதடிக்குளடிப்பதெனக்கவிதைகேட்டு
பல்லடிக்கிடுகிடெனப்பறையழக்குநெஞ்சர் தமைப்பாடுவேனோ
வில்லடிக்கும்பிரம்படிக்கும் கல்லடிக்குள்விரும்பிநின்றபெய்யனின்ற
செல்லடிக்குக்கடவரையிற் சோடிக்கலைபடிக்குஞ்செந்திலானே ௧௯

குட்டுதற்கோபிள்ளைப்பாண்டியனிங்கில்லைக்
குறும்பியளவாக்காதைக்குடைந்துதோண்டி
எட்டினமட்டறுப்பதற்கோவில்லியில்லை
இரண்டொன்றாய்முடிந்துதலையிறங்கப்போட்டு
வெட்டுதற்கோகவியொட்டக்கூத்தனில்லை
விளையாட்டாக்கவிதைதனை விரைந்துபாடித்
தெட்டுதற்கோதறிவில்லாத்துரைகளுண்டு
தேசமெங்கும்புலவரெனத்திரியலாமே. ௨௰.

மூட்டின்றியொன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறேழ்
எட்டொன்பான் பத்தானதுவே. ௫

கர்ப்பிசெல்வைப்பன்றென்றின்பின், அவனோடுசேர்ந்து ஆ- ஒன்றுஇர ண்டாயின. மணி- மூன்று நானகாயின- தரு- ஐந்து- ஆறாயின- மேகம்- ஏழு- எட்டாயின- திதியம்- ஒன்பது- பத்தாயின.

ஆகசெய்யுள் ௩௱௨.



# காளிமுத்து.

நெல்லச்சொன்னபாணத்தைக் கைம்மாவைநிதிதமும்
வெல்லச்சொன்னவலர்க்கீயுங்குழந்தைவிசயநின்பாற்
செல்லச்சொன்னவென்னைப்போவெதம்மையலைத்திர்த்திடென்று
சொல்லச்சொன்னாந்தமின்னல்பன்னண்மலர்ச்சோலையிலே, ௧

பழுத்தான்மாத்திறப்பறவையைப்போலநற்பாவலர்க்குக்
கொழுத்தான்வழங்குங்குழந்தைவெண்கொங்கையைக்கூருநாள்
அழுத்தாகவேளையில்வெங்கீர்பன்னீர்மதியும்மழல்சேர்
கொழுத்தான்மதனுங்கொழுத்தான்பருவக்குறிப்பறிந்தே ௨

பொன்னூர்மருமத்தன் பூம்பாவைவேலப்பனருள்
மன்னுகுழந்தைக்குருநாதநீதனைரோதயனை
பன்னுண்மலர்க்குழம்பின்னறொர்நாளும்பரிந்தனைய
கண்ணுளிந்நாள்வரச்சொன்னேன் மின்னுண்மணநாளென்னவே. ௩

மாகமழைக்கரன்பூம்பாவை வேலப்பன்மைந்தன்மின்னூர்
மோகன்குழந்தைக்குருநாதன் வெற்றியினின்மோடிவைத்துப்
பாகமொழிக்குழன்மாதே விரித்துப்படமெடுக்கும்
நாகமறைத்துக்குழ னமக்கினலமல்லவே. ௪

போதத்தைமேவுமயிலைக்குழந்தைக்குப்போர்மதன்செய்
கேதத்தையுந்துயிறைகத்தையுந்தனக்கின்னைதநிறை
மோதத்தையுந்துயிலாததைகயும்மபன்புட்டுதென்றல்
வாதத்தையுந்தரியாதத்தையுஞ்சொல்லவாதத்தையே. ௫

வண்டாங்கிசைபயின்மாலையின்வேலப்பன்மைந்தனிதி
கொண்டான்கிளையவளர்த்தான்குழந்தைக்குவட்டின்மின்னே
பண்டாங்கிசையினண்மால்கொண்டுபோபன்குளத்திறைக்
கண்டாங்கியைக்கிழித்தாலென்னபாவநகருதுவதே- ௬

பாம்பன்-அரவாபரணன்-குளத்தினடுக்கண்நெற்றிக்கண்ணாகிய அக்கினி தாங்கி-அவன்வாகனமாகிய ஆடு.

வணக்கொந்தளவஞ்சிபூஞ்சோலைத்தஞ்சிவளருமிரு
தனக்குன்றுசெய்யுந்தொழில்சொல்லவோதமியேனைக்கண்டாற்
கனக்கும்புளகிக்குமபாரிக்குமபூரிக்குங்கண்கறுக்குஞ்
சினக்குந்தனக்குமெனக்குமுண்டாக்குந்தினஞ்சண்டையே.

ஆகசெய்யுள் ௩௯௯.

---

# பாண்டியன்கலித்துறை

சுராராஜசம்புவைரியென்மாதுசரீரமெல்லாம்
பொராராசரத்துக்கிவள்பொருட்டேபசும்போற்கிரண
சுராராசதிவ்வியகிரீடவிபாடத்துடித்தடக்கைப்
பராராசராவணராமாபராக்கிரமபாண்டியனே. ௧

காளைமுகிறகுலமெல்லாம் விளங்குகடிந்திட்டநீ
வேளையுமப்படிச்செய்திலையே விளைநெல்வயலில்
வாளைகுதித்துவளர்பூங் கமுகின்மடலொடியப்
பாளைமுறிக்குந்துறைவா பராக்கிரமபாண்டியனே. ௨

ஆர்க்குங்குளிருநிலவுடர் கோனின்வலங்கல்பெறு
வார்க்குங்குமமுலையாட்கனலாகும் வடக்குந்தெற்கும்
மேற்குங்கிழக்குமொரு வெளுப்பாய்நின்றுவிண்ணையெட்டிப்
பார்க்கும்புகழுக்கிறைவா பராக்கிரமபாண்டியனே- ௩

கூரம்பொறுக்கவிழியாள் கதலிக்குருத்திவிட்ட
ஈரம்பொறுக்கவருந்திலளே யிந்தி. னிட்டசெம்பொன்
ஆரம்பொறுத்தபுயமீதிலாயிரநாவுரக
பாரம்பொறுத்தபுயலேபராக்கிரமபாண்டியனே ௪

வெறிக்குங்குமக்கொங்கைமீதேயிளம்பிறைவெள்ளைநிலா
எறிக்குமபொழுதுவந்தாயிலையேயிலங்காபுரிமைக
குறிக்கின்றராவணன்பொன்முடிபத்துஞ்சரங்கைவிட்டுப்
பறிக்கின்றசண்பகமாறாபராக்கிரமபாண்டியனே. ௫

சுரும்பேய்க்கும்வாட்கண்ணிபங்காளர்கண்கொண்டுசுட்டுவிட்ட
பெரும்பேய்க்குவேப்பிலைக்காப்புதலாய்பிணர்ச்சர்பசுஞ்சோங்

கரும்பேய்க்கும்மென்முலையாரமுதூட்டியடர்ந்துகொல்ல
வரும்பேய்க்குவானுதவுங்குலசேகரமன்னவனே. ௬

பூணித்திலத்துப்புயல்வீரமாறன்புகல்கவிக்கு
நாணிப்புலவர்செல்லாமென்செய்யவாரிந்தநானிலத்தில்
ஆணிக்கனகமணங்கரிற்பூமணம்யார்கொள்ளுவார்
மாணிக்கந்தித்திக்கிலென்னாகுமற்றமதுரங்களே ௭

எண்ணீர்மைநாலுக்ககத்தியனாமிவனென்பதெல்லாம்
வெண்ணீர்மையன்றிவிரகல்லவேயிவ்வியனுலகிற்
பண்ணீர்மைதேரும்பராக்கிரமமாறன்பதங்கழுவுந்
தண்ணீர்குடித்தல்லவோகும்பயோனிதமிழ்கற்றதே. ௮

காம்புவனம்புக்கதோளாட்குநின்றன்கழுத்திலிட்ட
வேம்புசனக்கும்விதியில்லையோவெகுண்டாச்சியர்கள்
தாம்பினடிக்கவுரலோடுகட்டத்தடைப்பட்டுச்சீப்
பாம்பினடிக்கின்றமாலேபராக்கிரமபாண்டியனே, ௯

கடந்தூங்குவேழப்பிடர்க்கேவரக்கண்டுகண்கண்முத்து
வடந்தூங்குவாடும்கிளிக்கென்செய்வேன்மணிவாய்திறக்க
விடந்தூங்குபாம்பின்படத்தின்மிசைதிமிதித்தியெனப்
படந்தூங்கவாடும்புயலேபராக்ரமபாண்டியனே. ௰

சடம்பழுக்குங்கிழட்டுக்குருகீர்தலைசாய்த்துநின்று
முடம்பழுக்குங்கைதைநற்றுறையிற்றெங்குமுப்புடைக்காய்
குடம்பழுக்குங்கொற்கையாங்குலசேகரன்கூடலிலென்
உடம்பழுக்கும்சிறையம்பழிகாருணர்ந்திலரே. ௰௧

மற்றொப்பிலாக்கொடைச்சண்பகமாறவைரோதயநின்
வெற்றிக்கிரண்டுண்டடங்காதகாரியமேருகிரிச்
சுற்றிலுங்கீர்த்தியடங்காதுநின்னுடைத்தோடழுவக்
கற்றைக்குழலிக்குமாலடங்காதிதுகைகண்டதே, ௰௨

விருத்தம்,

ஒருவானுதல்பண்டுளங்களிக்கவுயர்வான்முகடுகிழித்தெறிந்து
மருவார்தருவின்மாங்கொணர்ந்தமதுரைவடிவேலதிவீரா
அரவார்வேம்பின்பசுங்கண்ணியந்தியிறைவிச்சுருளென்று
இரவாதிருக்கவீயளித்தற்கிரங்காதிருந்தாயிதுநாளே. ௰௩

இரட்டையர்,

தேங்குபுகழார்க்கூர்சிவனேவல்லாளியப்பா
நாங்கள்பசித்திருக்கஞாயமோ-போங்காணும்

கூறுசங்குடோன்முரசுகொட்டோசையல்லாமற்
சோறுகண்டமூளியார்சொல், ௰௪

மூடர்முன்னேபாடன் மொழிக்காலறிவரோ
ஆடெடுத்ததென்புலியூரம்பலவா-ஆடகப்பொற்
செந்திருவைப்போலணங்கைச்சிங்காரித்தென்னபயன்
அந்தகன்னாயகனானால். ௰௫

வேயீன்றமுத்தர்மனைவெட்டினனேயிடையன்
தாயீன்றமேனிதயங்கவே-பேயாசேள்
எத்தனைநாளென்றே யிடறுவான்பாற்குடத்தை
அத்தனையும்வேண்டு மவர்க்கு. ௰௬

மாங்காட்டுவேளாளன்மகளைமருமகன்பாற்
போங்காட்டியின்பம்புணர்ந்தானே-ஆங்காணும்
மக்கண்மெய்தீண்டலுற்றின்பமற்றவர்
சொற்கேட்டலின்பஞ் செவிக்கு. ௰௭

குன்றுங்குழியுங்குறுகிவழிநடப்ப
தென்றுவிடியுமெமகெனகோவே-ஒன்றுங்
கொடாதானைக்கோவென்றுங் காவென்றுங் கூறில்
இடாதோநமக்கிவ் விடி. ௰௮

காளமேகப்புலவரும் இரட்டையரும்,

காணென்றாலஞ்சிருக்குநற்சாபங்கற்சாபம்
பாணந்தான்மண்ணின்றபாணமே-தாணுவே
சீராரூர்மேவுஞ்சிவனேநீயெப்படியோ
நேரார்புரமெரித்த நேர். ௰௯

ஆசுகவியாலகிலவுலகெங்கும்
வீசுபுகழ்க்காளமேகமே-பூசுரா
விண்கொண்டசெந்தணலாய்வேகுதேயையையோ
மண்ணின்றபாணமென்ற வாய். ௨௰

கட்டளைக்கலித்துறை

புராதனமானதமிழ்ப்புலவீரிந்தப்புன்குரங்கு
மாமரம்விட்டிங்குவந்ததென்னேவகைகேட்டிலையோ
தாதலம்வென்றதமிழ்மாறனையுந்தன்தம்பியையும்
இராகவனென்றுமிலக்குவனென்றுமிருந்ததுவே, ௨௧

ஆகசெய்யுள்-௪௨௰,

---

# ஒப்பிலாமணிப்புலவர்பாடிய அகவல்

ஆடெரிபடர்ந்தகோடியிரடுப்பில்
ஆம்பிபூப்பத்தேம்பசியுழல
இல்லிதூர்ந்தபொல்லாவறுமுலை
சுவைதொறுஞ்சுவைதொறும்பால்காணாமற்
குழவிதாய்முகநோக்க
மனைவியென்முகநோக்கயானும்
நின்முகநோக்கிவந்தனங்குமணா. ௧

குமணராஜன்.

அந்நாள்வந்திலை யருங்கவிப்புலவோய்
இந்நாள்வந்துநீ நொந்தெனையடைந்தாய்
தலையினைக்கொடுபோய்த் தம்பிகைக்கொடுத்ததன்
விலைதனைமீட்டுன் வெறுமைநோய்களையே. ௨

மாந்தையிலேவாளு மகுடத்தியாகியுனக்
கேந்துதழும்போவிரண்டுளதே - வேந்தர்
முடிததழும்புன்காலிலே முத்தமிழோர்க்கீயும்
படிததழும்புன்கையிலே பார். ௩

வெம்புங்காலை வெதும்புவிழுஞ்சிரம்
செம்பொன்கோடிவிலையெனச்சிந்தித்தான்
உம்பர்நாடுமுலகினுந்தேடினும்
எம்பிபோலெமக் கியாவருரிமையே. ௪

ஆறுபெருக்கற் றருந்திடர்தான்பட்டாலும்
ஊறலமையாதோ உலகாற்றத்-தேற
வறியையேயானாலு மென்கவியைமாற்றச்
சிறியையோசீர்க்குமணா செப்பு. ௫

வில்லைவளையாதே மீசைமுறுக்கிச்சினத்து
முல்லைமலரம்பையென்மேன் மோதாதே-நில்லடா
வந்தாரடாமுருகர் வந்துகடப்பந்தாரைத்
தந்தாரடாமன்மதா. ௬

செந்திற்குமாரன் றிருவழகைக்கண்டவுடன்
வந்திக்குமாரன் வதைக்கின்றான்-அந்திக்கு

முன்னாமே சென்றெனது மோகமெலாஞ்சொல்லிவந்தால்
அன்னமேகும்பிடுவேன் யானே, எ

தங்கடனமிருக்கத் தாரேந்தரெல்லோரும்
எங்கடனத்துக்கே யிச்சிப்பார்-எங்கடனம்
கச்சிருக்கும்பாருலிக்குங் காமபாணங்கள்பட்டு
பிச்சிருக்கும்வேண்டாம் பிளாய். அ

இடுவோர்சிறிதிங்கிரப்போர் பெரிது
கெடுவாய்நமனே கெடுவாய்-படுபாவி
கூவத்துநாரணனைக் கொன்றாயேகற்பகப்பூங்
காவெட்டலாமோ கரிக்கு. கூ

மையூருங்கண்ணார் மயக்கப்பொருகரும்பு
கையூருங்காமாவுன் கண்ணுணை-செய்யூர்
வளவனையினான்பிரிந்தவா றுனக்குச்சொன்ன
உளவனையினானென் றுணா. (வளவன்-நயினான்.) ய

ஆழிவாய்ச்சத்தமடங்காதே யான்வளர்த்த
கோழிவாய்மண்கூறு கொண்டதோ-ஊழி
இரண்டதோகங் குறின்கரனுந்தேரும
உருண்டதோ பாதாளத்துள். கக

அரவங்கரந்ததோ வச்சுமரமிற்றுப்
புரவிக்கயிறுவிப் போச்சோ . இரவிதான்
செத்தானோவில்லையோ தீவினையோயாங்கியெனச்
செத்தால்விடியுமிரா, கஉ

முலையுங்குழலு முளைப்பதற்குமுன்னே
கலையும்வளையுங் கழன்றாள்-மலையில்
இராப்பளியானெறிவருஞ் சேவின்மணியோசை
இராப்பழியுங்கொள்ளா ளிவள். கங

பாண்டியன்றானேன் பசலைமுலைப்பாலானேன்
ஆண்டிகையிலேந்தியகொன்றானேனே-வேண்டியபோ
துள்ளங்கைத்தேனானே னோர்மதலைபூத்தபின்
புள்ளங்கைத்தேனானே னுனக்கு. கச

முட்டத்துப்பன்றி முளைவித்திருப்பதத்தைக்
கிட்டத்துப்பன்றிக் குடங்தேனே தொட்டு

மருங்கிலேசக்கெடுத்த மாலேயெனக்கு
வருங்கிலேசங்கெடுக்க வா, கரு

வேறு.

மாதர்க்கிதங்கவிவாணர்க் குரசாலவணக்கங்குரு
நாதர்க்குநீதியோடாசார நண்பினயந்தவர்க்குக்
கோதற்றவாசகம்பொய்க்குப்போய் கோளுக்குக்கோளறிவி
லாதர்க்கிரட்டிப்பறிவிடையோர் செய்யுமாண்மைகளே. கசு

குழற்காலரவிந்தங்கூம்பக் குமுதமுகையவிழ்ப்ப
நிழற்கான்மதியமன்றோ நின்றிருக்குலநீயவன்றன்
அழற்காலவிர்சடைமீதே யிருந்துமவ்வந்திவண்ணன்
கழற்கால்வணங்குதியோ வணங்காமுடிக்கைதவனே. கஎ

பட்டானைதைவண்டுபாடுங் குழற்கண்வலிதன்
றூட்டாமறையைத் தொழுதேனினியென்றலேயில்விதி
தீட்டான்கருமுகில்போலேவரு மங்கச்சேட்டெருமை
மாட்டானினிவரமாட்டான் வந்தாலும்வணங்குவனே. கஅ

சிமானுநாமகள் கோமானுமேத்தித்தினம்பணிந்து
பூமாலேசாத்தியரத்ன சபாபதிபொன்னடிக்குப்
பாமாலேசாத்தினின்றே னவனுன்மிகப்பாடுபட்ட
ஏமாவுன்னுவினியாமா வென்பாலினியெய்துதற்கே. க௯

தடங்கொண்டகல்வில்லின்மெல்லெனப்பூட்டித்தமதூரத்தில்
வடங்கொண்டுசாத்திவிடங்கொண்டுபார்த்துமணிகிளரும்
படங்கொண்டபாம்பிற்பழகியபின்மலேப்பாவைதன்னே
அடங்கொண்டவொற்றித்தியாகேசர்புற்றினிடங்கொண்டதே. உ௦

விடங்காட்டிக்கண்டத்திற்றோலுரிகாட்டித்தன்மெய்யினேப்புற்
றிடங்காட்டிவாலேயொருபுறங்காட்டிவெண்டேறுமலர்த்
தடங்காட்டியபொழிலாரூர்த்தியாகர்தமதுபொற்றாட்
படங்காட்டியாடிநின்றுருலகேழும்பணியென்னவே, உக

புரங்கனேமாலேச்சதுராননத்தனேப்போகியைமுப்
புரந்தனேச்சாதித்திமையாத நாட்டப்புலோமிசைவாழ்
புரந்தனேமானுந்திருவொற்றியூரின்பொன்மணிக்கோ
புரந்தனேக்கண்டனன்காணேனுதிக்கும்புரந்தனேயே. உஉ

வெண்பா.

நல்யம்புலியணிந்தோ னுளதனுக்கெட்டாநாள்
வில்லம்புடன்கூடி விட்டாலும்-வல்லி

இலட்டியாளே முன்னுலக மேழளந்தோன் மைந்தன்
குடையானதன்றோ கொடிது. (அம்புலியணிந்தோனுள் ஆகினை)

எட்டாநாள்-அத்தம்-கை-வில்-புருவம்-அம்பு-கண்.

வாழ்நிலைசேர்பொன்னுலகம் வண்களந்தைக்கோபுரத்தின்
ஏழ்நிலைமேலேறிடினு மேறலாம் - பாழ்மனமே
அன்புன்னைக்காட்ட வரனறிவதேயருமை
தென்புன்னைக்காட்டனடி சேர். ௨௪

கஞ்சிகுடியாளே கம்பஞ்சோறுண்ணாளே
வெஞ்சினங்கொள்ளும் விரும்பாளே-நெஞ்சதனில்
அஞ்சுதலைபாவருக்காறுதலையாவாளே
கஞ்சமுககாமாட்சிகாண். ௨௫

சோரவிட்டபுயன் றென்னவன்றன் றிண்சிலம்பிற்
போதாலுங்கண்ணாலும் போர்செய்வோர்-கோதும்
கொடியிடையார் தமமாற் குணமாமோவிந்தத்
துடியிடையார்கொண்ட துயர். ௨௬

போதாற்போர்செய்வான்-மன்மதன்-கண்ணாற்போர்செய்வான் பரமசிவன் இவர்கள் கொடிமீனம்-இடபம்-இவற்றிடையிலுள்ளது - மேஷம் ஆடு.

அப்பிலேதோய்த்திட்டெடுத்தநாமதனைத்
தப்பினமைந்தது தப்பாதோ-இப்புவியில்
இக்கலிங்கம்போனாலென் னேகலிங்கமாமதுரைச்
சொக்கலிங்கந்தானிருக்கச் சொல். ௨௭

ஆக - செய்யுள் - ௨௭.

## பட்டணத்துசுவாமிகள்

காப்பிளக்கப்பொய்யுரைத்துநவநிதியுந்தேடி
நலமொன்றுமறியாதநாரியரைக்கூடிப்
பூப்பிளக்கவெழுகின்றபற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப்புதல்வர்களைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீர் கைவிடவுமாட்டீர்
கவட்டுக்கொன்மரத்திடுக்கிற் காலனுழைத்துக்கொண்டே
ஆப்பதனைப் பிடித்தசைத்த பேய்க்குரங்குபோல
அகப்பட்டீர் கிடந்துழல வகப்பட்டீரே. ௧

இனியுழுதுபயிரிதென்றுநன்றிசைவிட்டிரந்துண்பதீனமெனவேகச்சுழ
லைமாதுமையுரைத்திடும்புத்தியைக்கைக்கொண்டுளத்திலிதூற்-காரியமெ
னக்கருதிமெத்தக்களித்திடுங்கண்ணுதலுமைகாக்கவே ௫

கவுரிகமலாயரனிரந்த சோறிதுவெனக்கமலைமண்கண்டே னைக்கா
ளைபொன்றேயாற் கெனமாடுமேய்த்ததைக்கட்டமடைய ஞரோவெனச்சி
ஞெருவர்துதென்ன வந்தாதுசென்றகதைசெப்பி லொருபாரதமெனவ
சேரொடுதிருடிஞனரளெனக்கட்டுண்டசெய்திகா மறிகோமென. சசை
யினடமாடிஞனரனென்னவவ்வாடலாவமறியாதோவென - ஆலமதைவ
னன்னரனென்ன மண்ணுண்டவனையறியோமோவென, விவரமொடு
மலைமகளுமலர்மகளு மிலர்மகளுமிவ்வாறு விளையாடுமிவர்களிணையா
மவிவருபுத்ரமித்திரகளத்திருடன்மேன்மேலுமிகவாழியே, ௬

கிறையவுளதோ வெளிதோகொளுவோம்
பிறையையுமுடிக்கணிந்த பெம்மான்-உமையும்
திருக்காட்டுப்பள்ளி திரிபாவாய்கீயுங்
கிருக்காட்டிப்பள்ளியெமக்கு. ௭

அடுத்துவருக்தொண்டனுக்கா வந்தசனைத்தாளால்
அடர்ந்ததுவுஞ்சதியமேயாகுல்-எடுத்ததொரு
மாங்கனிக்காயென்னை மடிபிடிக்தமாபாவி
சாங்கனிக்காதித்தன்வரத் தான், ௮

குடக்கோடுவானெயிறு கொண்டார்க்குச்சோழன்
முடக்கோடுமுன்னமணிவார்க்கு - வடகமோடு
தேருடையான்றெவ்வுக்குத் தில்லைதோன்மேற்கொள்ள
ஊருடையானென்னு முலகு. ௯

விருத்தம்.

செய்கொண்டாருங்கமலச் செம்மலுடனையரசைப்
பாய்கொண்டானும்பணியும்பட்டீச்சுரத்தானே
நோய்கொண்டாலுங்கொள்ளலா நூறுவயதுமளவும
பேய்கொண்டாலும் பெண்கொள்ளலாகாதே. ௰

கிட்டையிலேயிருந்துமனத்துறவடைந்த பெரியோர்கணிலன்று
ளைக், கிட்டையிலேதொடக்குமுகதிபெறுமளவும் பெரியசுகங்கிடைக்கு
ங்காம, கட்டையிலேமதிமயங்கிச் சிறுவருக்குமண்ம்பேசிவிரும்பித்தாலி
கட்டையிலேதொடுத்துநக்கட்டையிலே கிடத்துமட்டுஞ்சவலைதானே

திருந்துதமிழிலக்கணவைந்திணக்கோவைவிருத்தகிரிச்செல்வற்கோது ம், பெருந்தகைமையுடையம்யாபவிடுமோலெவெங்கனூர்ப்பிடாரிகாண்க, இரும்புவியுலொருமநங்கைக்கொம்பொடியாமற்காத்திங்கிருக்குகீரம்,மூருங்கைதனேலேரோடுங்களோந்தனேயென்றுலுனக்குமுறைநன்றுமோ.

இவர்பிதா,

கயல்வாய்த்தகண்ணியுலகின்றவல்லிபங்காவுனது
செயல்வாய்த்தவம்பற்குமல்லாதவர்க்குஞ்சிரிப்பல்லவோ
இயல்வாய்த்தவெக்தைக்கியான்வாய்த்ததுவுமிகவென்றெனக்கு
வயல்வாய்த்ததுமனேவாய்த்ததுவைந்தாகள்வாய்த்ததுமே ௰௩

முன்னமொருதமிழ்ப்புலவன்றனேயுண்டுகண்டசுவைமுதிர்ச்சியாலே தன்னியலைமுழுதுமுரைத்தமையாமுன்னினேக்கவர்ந்து தடங்காடத்தி,மன்னவனுண்டானென துமாதவத்தின்வலிதீர்மண்ணின்மீதே, என்னுடன்வந்தவதருந்தவிளங்கருணேப்பிரகாசனென்லுங்கோவே. ௰௪

காணியென்பதைநாரியென் றுரைத்துநகையால்
வேணுவானதுவளோந்துபோய் புகுந்ததுவென்றூற்
காணலாவதோருநவமெக்காரியைக்கண்கால்
பூணுவார்மயல்காளையரென்பதும்புதிதோ. ௰௫

அல்லிமலர்ப்பண்ண வனுமாராய்ந்தறிகவிதை
சொல்லிமிருவரிடைத்தோன்றியயான்-முல்லை
அரும்பிற்பொலியு மணிமுறுவனல்லாய்
கரும்பிற்கணுகிகர்த்தேன் காண். ௰௬

வேலையசுவாமிகள்,

ஆண்டலனுலெனேயொவ்வாய் விக்தையினிற்றமையனினுமதிகமென்றே, பூண்டவுலகந்தனிலுள்ளுளார்புகல்வதுகேட்டிருந்து மென்பதுமைதானே, காண்டகுகன்மணியேநல்லிளங்கருணேப்பிரகாசக் காளாய்நீதான், மாண்டனே யென்றறிந்திருந்து முயிர்தறித்தோன்யானுமிகு வன்னேன்சேனே. ௰௭

சத்தி முத்தப்புலவர்.

காராய்காராய் செங்கனூருய்
பழம்படுபணேயின்கிழங்குபிளந்தன்ன
பவளக்கூர்வாய்ச்செங்காறூராய்

நீயுநின்மனைவியுந்தென்றிசைக்குமரியாடி
வடதிசைக்கேகுவீராயின்
எம்மூர்ச்சத்திமுத்தவாவியுட்டங்கி
நனைசுவர்க்கூரைக்கனைகுரற்பல்லி
பாடுபார்த்திருக்குமெம்மனைவியைக்கண்டு
எங்கோன்மாறன்வழுதிகூடலில்
ஆடையின்றிவாடையின்மெலிந்து
கையதுகொண்டுமெய்யதுபொத்திக்
காலதுகொண்டுமேலதுதழீஇப்
பேழையுளிருக்கும்பாம்பெனவுயிர்க்கும்
ஏழையாளனைக்கண்டனமெனுமே. ௰அ

வெறும்புற்கையுமரிதாக்கிளைசோறுமென்வீட்டில்வரும்
எறும்புக்குமார்பிடந்தமில்லைமுன்னாளென்னிருங்கலியாம்
குறும்பைத்தவிர்த்தகுடிதாங்கியைச்சென்றுகூடியபின்
தெறும்புற்கொள்யானைக்கவளங்கொள்ளாமற்றெவிட்டியதே, ௰௯

வரதுங்கபாண்டியன்,

அஞ்சலிலன்றகாதலமுங்கணபணமுங்கங்கணமு
மரைக்கிசைந்தபுலியுடையுமப்புலிச்செஞ்சடையுங்
கஞ்சமலர்ச்சேவடியுங்கனைகழலுஞ்சிலம்புங்
கடுவனைப்பொழிதிருமுகமுங்கண்களொருமூன்று
நஞ்சமையுண்டமணிமிடறுமுந்நூலுமார்பு
நலந்திகழ்வெண்ணீற்றொளியுமறிமானுமழுவும்
பஞ்சடிச்சிற்றிடையுமையாளொப்பனைபாகமுமாய்ப்
பால்வண்ணனுளத்திருக்கப்பயமுண்டோவெமக்கே. ௨௰

அவர்மனைவி.

ஆக்கையெனுங்குரம்பைபனைத்தனையாப்பொருளை
யருளொளியைப்பராபரத்துக்கப்புறமாமறிவை
நீக்கமறவுயிர்க்குயிராய்விடமறவெங்கெங்கு
நிறைந்துநின்றமுழுமுதலைவிளங்கொளிவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள்செய்தனந்தவக்குறைகண்டுபடிக்கும்
பழவடியார்தமக்குதவும்பசுந்துணர்க்கற்பகத்தை
வாக்குமனவிகற்பகத்தாலளவுபடாவொன்றை
மாசற்றவெறுவெளியைமனவெளியிலடைப்பாம். ௨௧

ஆகச்செய்யுள்-௨௬௭.

—(*)—

## பலபட்டைச்சொக்கநாதப்புலவர்

—+—

இன்றுபடியளக்கு நீலக்கொடிகளிரண்
டென்றுமுளவாங்குடந்தையீச்சுரருக்-கொன்றுக்
குரைக்குமறையீந்தா ரொன்றதனுக்கென்றே
வரைக்குமறையீயா ரவர். ௧

எடுத்தசனனங்கடொறு மீன்றெடுத்ததாய்மார்
கொடுத்தமுலைப்பாலனைத்துங் கூட்டில்-அடுத்தமணிப்
பைந்நாமணைதுயின்மால் பாலாழியுஞ்சிறிதா
மன்னுசிதம்பரதேவா ௨

முக்கணனென்றரனை முன்னோர்மொழிந்திடுவார்
அக்கண்ணற் குள்ள தரைகண்ணே-மிக்க
உமையாள்கண்ணொன்றரை மற்றான்வேடன்கண்ணொன்
றமையுமிதனாறெண் ணறி. ௩

பாணியிலேபுள்ளிமான் பாகத்தேபச்சைமான்
வேணியினிலேயோர் வெள்ளமான்-காணுமலர்ச்
செம்மானுலவுந் திருமறைக்காட்டீசரே
எம்மானுக்கெங்கே யிடம். ௪

### கட்டளைக்கலித்துறை

வான்பணிந்தாலவனென்பே யுரைக்குமலரிலயன்
தான்பணிந்தாலவன்றன்றலையே சொல்லுந்தாரணியுன்
பரன்பணிந்தாலவன்கண்ணே பரிந்துபரிந்துரைக்கும்
நான்பணிந்தாலெனக்கார் சொல்லுவர்சொக்கநாயகரே. ௫

மெய்க்கேயணியும்பணியே யென்பேமுடிமேற்கிடந்த
கொக்கேவெண்கூன்பிறையே யரைசேர்ந்தகொடும்புலியே
அக்கேயுமக்குக்கிடைத்த வுபாயங்களாவெமக்குங்
கொக்கேசர்பாதத்தைக்கிட்டு முபாயத்தைச்சொல்லுங்களே. ௬

தாண்டித்திரியும்விடையேறியோ டென்றுதாங்கிப்பிச்சை
வேண்டிக்கழியுங்காலங்களளாமல் விரும்பிச்சொக்கர்
ஆண்டித்தொழிலைவிட் டையமதுரைக்கரசிருந்து
பாண்டித்துரைத்தனஞ்செய்தே பிரபுப்பட்டனரே. ௭

பண்டோரரியபறைபாடுங் கூடற்பசுங்கிளியைப்
கண்டோதினேனென்கவலையெல்லாமினிக்காலன்றிண்டு
முண்டோவிக்கிடம்போதம்மைகோ யின்முன்னேதிரியும்
குண்டோதரன்கண்டுகொண்டாற்றடை தட்டக்கொள்ளுவனே. ௨௪

செகத்காபெனவந்ததெனளழகே தென்கைலையெனு
மகத்தார்பணிபுங்கயற்கணம் மேனின்னயனத்தினால்
மிகத்தான்கருநிறங்கொண்டமையாலும்விளங்குதிரு
முகத்தாமறைக்கொருவண்டானது முத்துமூக்குத்தியே. ௨௫

செகமதின்மிக்கமதுரையின் மாணிக்கஞ்செட்டியதாய்
முகமதிரத்தினம்விற்றசொக்கேசரை மேவியன்பாய்
சுகமதுதங்கெணையாள் கயற்கண்ணிவின்சுந்தரமா
முகமதியீன்றகதிர்மணியோ முத்துமூக்குத்தியே. ௨௬

பொன்னேமலையத்துசனகிய புயலின்றெடுத்த
மின்னேயுனதுதவனத்தையெ வெண்மதியமெனத்
தன்னேயொத்தாலொரு தாரகையர்னதுதான்விரும்பி
முன்னேகிடக்கினம்பார்க்கின்றதோ முத்துமூக்குத்தியே. ௨௭

வடிகொண்டசெந்தமிழ்க்கூடலில்வாழ் சொக்கர்வந்திதரும்
பிடிகொண்டபிட்டுக்குமண்ணேசுமந்து பெருமகரக்
கொடிகொண்டவெற்றித்துரைப்பாண்டியன் கைக்கொடும்பிரம்பால்
அடிகொண்டபோதிலடியாரவர் பொன்னடிகொண்டதே. ௨௮

அங்குவடப்புனையானந்தவெள்ளத்தை யங்கயற்கண்
பக்கத்திருந்தபவளாசலத்தைப் பழம்பொருளை
முக்கட்கனியைபக்கடம பாடவிக்கண்புலோத்தெழுந்த
கொக்கைக்கண்டாலன்றித் தீராதுநெஞ்சிற்றுயரங்களே. ௨௯

பொன்போலுங்கூடற்பிராட்டியைச்சேவிக்கப் போய்பொழுதில்
என்பால்வரவெதிர்நின்றுபேசவு மென்றலைமேல்
தன்பாதஞ்சூட்டவுங்கேட்ட தெல்லாந்தருவயே
அன்பாகவந்திடுமாள் கலிகாலமென்றட்சுவனே. ௩௰

உரையேனும்பேரையுணரேன்சீரை யுணக்கருநிக்
கரையேனெவ்வாறுகடப்பேன் வினைபக்கடந்தகுணக்
கரையேயருட்பெருவாரிதியே மதுராபுரிக்குத்
துரையேபழகியசொக்கேசமிழ் தந்தகர்தரமே. ௩௧

முக்கட்பராபரைசொக்கப்பிரானெனு முன்னவனே
டொக்கச்சிவந்தகயற்கண்ணிலகுநிதியுற்றுமிகச்
செக்கச்சிவந்தபொற்றாமரைப்பாத தெரிசனைக்கே
பக்கத்தடுத்தவர்சொர்க்கத்தினையெட்டிப்பார்ப்பவரே, ஙஉ

மட்டார்குழலங்கயற்கண்ணம்மேயிம்மட்டென்றுதொகைக்
கெட்டாதனதுதுயர்நின்பாற் சொல்லியேசலிக்க
ஒட்டார்செய்ப லாகாதுபாருன்னடிமைதன்னை
கட்டாற்றிற்கைவிட்டிடாதே பழிவெகுநாணிற்குமே, ஙங

விரித்தான்சடையைமகாமேரு வாசுகிவில்லைவிட்டுச்
சிரித்தான்புரத்தையெரித்தான்பரகுரு தேசிகன்முன்
உரித்தான்கரியையுரித்தான்பகிரண்டத் துள்ளுலகும்
பரித்தான்மதுரைதரித்தான்சவுந்தரபாண்டியனே: ஙச

மைக்காற்குழல்பெண்வடிவானைத் தென்னவன்மாமகளை
அக்காளையோன்பங்கிலாத் தானைமாறங்கையானவளைக்
இக்கார்தொழுங்கயற்கண்ணையோர்தினஞ்சேவைசெய்தால்
எக்காலமுமவர்சொர்க்காதிபாகத திருப்பவரே. ஙரு

வண்டிட்டகூந்தலும்வாரிட்ட கொங்கைவரைகளுங்கற்
கண்டிட்டசொல்லுங்கயற்கண்ணிபாக முங்கைதொழுதேன்
தண்டிட்டடிக்குமறலிவந்தாற்சன்னை யிட்டுநகைக்
துண்டிட்டுவாசிறுபிள்ளாயென்றாருக் கழுவப்பவனே. ஙசா

பொன்னேபொருந்தற்புதமே பொலிந்தமென்பூந்திருவே
தென்னேசிறந்தசெந்தேனே திருந்தருட்சின்மயமே
அன்னேயமுதேயருளே யமரர்க்கரும்பொருளே
மின்னேவியன்சுடரே மதுராபுரிமீனம்மையே. ஙஎ

செட்டதுமில்லைகொடுப்பாருமில்லை இரக்குழலில்
பூட்டேறுமில்லையிதெல்லா மெய்பாவிலைப்பூரணவரங்
கேட்டேனதற்குப்படியிலையே யினிக்கெட்டகவுகான்
பாட்டேனுன்மேற்பழிபோட்டேன்மதுரை மனோன்மணியே. ஙஅ

உள்ளக்கவலையெலாம் விள்ளும்போதனை யுமனம்
எள்ளத்தனைபிரகாசிருந்தாவெளியே னினிமேல்
தள்ளப்புறத்தினிலென்றாலும் போவதுகானிலைப்பொன்
வெள்ளத்தழுந்தன்னுங்கிள்ளாய் கடம்பவனவல்லியே. ஙகூ

